10th August 1960]

* 76 *Q.*—SRI K. R. VISWANATHAN: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received any petition, dated 23rd June 1960 from the villagers of Udaiyarpalayam taluk requesting to bring cashewnut crop under the Regulated Market system; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Sulphur*

* 77 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

1959-ஆம் டிசம்பர்மீ 15-ம் தேதி நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 181-க்கு அளித்த பதிலையொட்டி போளூர் தாலூகா தாளியார் பங்களாவுக்கு அருகில் கிடைக்கும் கந்தகத்தைத் தோண்டி எடுப்பது எந்த நிலையில் உள்ளது?

THE HON. SRI R. VENKATARAMAN: The Director, Geological Survey of India, has reported that the Geological Survey of India are short of drilling equipment and that the work will be taken up during the Third Plan period as soon as a drill becomes available.

SRI S. M. ANNAMALAI: நானும் இந்தச் சட்டமன்றத்தில் 3-1/2 ஆண்டுகளாக இருக்கின்றேன். இதுபற்றி 4 கேள்விகள் போட்டு, அடுத்தாற்போல் 5-வது கேள்வி போட்டிருக்கிறேன். இந்த ஐந்து கேள்விகளுக்கும் அமைச்சர் அவர்கள் இதே மாதிரி தான் பதில் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். நாடு இருக்கிற நிலைமையில் இந்தக் கந்தகத்தை தோண்டி எடுத்தால் மிகவும் கிராக்கியாக இருக்கும். இந்த நிலைமையை ஒட்டி இந்த கந்தகத்தை தோண்டி எடுப்பதற்கு மத்திய சர்க்காரை அணுகி கூடிய சீக்கிரம் துரிதமான நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI R. VENKATARAMAN: ஐந்து கேள்விகள் போடுவதன் மூலம் ஒரு டிரில் கிடைக்குமானால், இன்னும் ஐந்து கேள்விகள் போடலாம் கனம் அங்கத்தினர். டிரில் அகப்படவில்லை என்பதுதான் காரணம்.

*Improvement of tanks*

* 78 *Q.*—SRI K. GOPALA KOUNDER: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) செஞ்சி தாலூகா, செம்மேடு கிராமத்தில் உள்ள P.W.D. ஏரியை அபிவிருத்தி செய்யத் திட்டம் தயாரிக்கப் பட்டதா?

(ஆ) அப்படியானால், எப்பொழுது வேலை துவக்கப்படும்?

[10th August 1960

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir. Proposals for (i) Special repairs and improvements to the tank and (ii) Desilting-*cum*-reclamation of the tank are being finalised.

(*b*) The works are likely to be started in January 1961.

SRI K. GOPALA KOUNDER: ஏற்கனவே இந்த ஏரி வேலையை 1959–60-ல் எடுத்துக்கொள்ளுவதாக கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். ஆனால் நாளது வரையிலும் ஒரு விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. ஆகையால் 1960–61-ம் ஆண்டிலாவது துரிதமாக இந்த வேலை எடுத்துக் கொள்ளப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: ஜனவரி 1961-ல் அதாவது நடப்பு நிதி ஆண்டில் எடுத்துக்கொள்ளப்போவதாகத் தான் சொன்னேன்.

* 79 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருப்பத்தூர் தாலூகா, வளையாம்பட்டில் உள்ள லாலா ஏரி, துலசீபாய் ஏரிகளைப் பழுதுபார்க்க வேண்டுமென்று கோரி கிரிசமுத்திரம் கிராம மக்களிடமிருந்து 1951-ம௵ பிப்ரவரி மீ 11, 1957-ம௵ ஆகஸ்டு மீ 26, 1959-ம௵ டிசம்பர் மீ 1 தேதிகளில் மகஜர் வந்ததா?

(ஆ) அப்படியானால், அவைகளின்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Necessary sanction of estimate for the restoration of the Lala tank has been issued by the Board of Revenue (Food Production). Proposal of the Superintending Engineer (Food Production) for the restoration of the Thulasi Bai tank is awaited by the Board.

SRI S. M. ANNAMALAI: இந்த ஏரிகள் எப்பொழுதோ உடைந்துவிட்டன. சுமார் 15 ஆண்டு காலமாக பல மகஜர்கள் அனுப்பியும்கூட மகஜர் ஒன்றும் வரவில்லை என்று அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். இந்த ஏரிகள் மூலம் ஏறத்தாழ 1,000 ஏக்கர்களுக்கு மேல் பாசன வசதி கிடைக்கும். இவ்வளவு காலமாக இவைகளை சும்மா விட்டுவைப்பது சர்க்காருக்கு நியாயமா? ஆகையால் உடனடியாக இதைக் கவனித்து சீக்கிரம் நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : There was an order of ban. The ban order was lifted only in January 1959 so that each case may be considered on merits. In view of that, it was further examined and now an estimate of Rs. 23,000 has been sent from the Superintending Engineer for the restoration of the Lala tank. The department has also instructed the Superintending Engineer to expedite the proposal in respect of the Thulasi Bai tank. So, we have asked the estimates to be expedited.